# Beginner Course - தேவன்/God

# 5 தேவனுடைய பண்புகள் / குணங்கள் - பாகம் *1*

YESUDAS SOLOMON

# பொருளடக்கம்

1. தேவனுடைய பண்புகள் - ஒரு அறிமுகம்
2. தேவனுக்கு மட்டுமே உரிய பண்புகள்/குணங்கள்
   (*In-Communicable* - மனிதனோடு பகிர்ந்துக்கொள்ள கூடாதவை)
3. தேவனுக்கும் மனிதனுக்கும் பொதுவான பண்புகள்/குணங்கள்
   (*Communicable* - மனிதனோடு பகிர்ந்துக்கொள்ள கூடியவை)

# 1. தேவனுடைய பண்புகள் - ஒரு அறிமுகம்

# 1. தேவனுடைய பண்புகள் ஒரு அறிமுகம்

- ஆங்கிலத்தில் *Attributes of God* என்பார்கள்
- கீழ்க்கானும் இரண்டு இயல்புகளிலிருந்து நாம் புரிந்துக்கொள்ளலாம்
    - *Nature of God* - தேவனுடைய இயல்பு தன்மைகள்
    - *Character of God* - தேவனுடைய இயல்பு குணங்கள்
- தேவனுடைய பண்புகளை அறிந்துக்கொள்வதினால் தேவன் எப்படிப்பட்டவர் என்பதும், நாம் எப்படி இருக்க வேண்டும் என்று தேவன் விரும்புகிறார் என்பதும் விளங்கும்

# 1. தேவனுடைய பண்புகள் ஒரு அறிமுகம்

- தேவனை அறிந்துக்கொள்வது வெறும் அறிவு சார்ந்தது மட்டுமல்ல, அவரை பற்றி தெரிந்து, அறிந்து, புரிந்து, அவரோடு ஐக்கியம் கொள்வது என்பதை கடந்த வீடியோவில் பார்த்தோம்
- தேவனுடைய பண்புகளை அறிந்துக்கொள்வது, தேவனுக்கு பிடித்த மாதிரி நாம் வாழ உதவும்

## 2. தேவனுக்கு மட்டுமே உரிய பண்புகள்/குணங்கள்

# 2. தேவனுக்கு மட்டுமே உரிய பண்புகள்/குணங்கள்

- ஆங்கிலத்தில் *"In-Communicable attributes of God"*
- மனிதனோடு பகிர்ந்துக்கொள்ள கூடாதவை
- மனிதனிடம் இவைகள் காணப்படாது
- மனிதனால் இவைகளை தனக்குள் கொண்டுவரவும் முடியாது
- தேவ தூதரிகளிடம் இவைகள் காணப்படாது
- இந்த பண்புகள் தேவனுக்கு மட்டுமே உரியது
- அநேக பண்புகள் இருப்பினும் ஒரு சிலதை இப்பொழுது பார்க்கலாம்

# 1. தாமாகவே இருப்பவர் / *Self Existence* / *Independent*

ரோம *11:34,35,36;* அப் *17:24,25;* யாத் *3:14,13*

எவரையும் சார்ந்து இருப்பவர் அல்ல

- அவருடைய சிந்தையை அறிந்தவன் இல்லை - ரோம *11:34*
- அவருக்கு ஆலோசனை கொடுப்பவன் இல்லை - ரோம *11:34*
- அவருடைய சித்தத்தை எதிர்க்க முடியாது - ரோம *9:19,* எபே *1:6*
- தமக்குச் சித்தமான யாவையும் செய்கிறார் - சங் *115:3;* ஏசா *46:10*
- கர்த்தருடைய ஆலோசனை நித்தியகாலமாகவும் நிற்கும் - சங் *33:11*
- நினைவுகள் தலைமுறை தலைமுறையாகவும் நிற்கும் - சங் *33:11*
- எல்லாமே அவருடையது - சங் *50:10-12*

# 2. மாறாதவர் / *Unchangeable* / *Immutable*

சங் *102:25-27*

நீர் ஆதியிலே பூமியை அஸ்திபாரப்படுத்தினீர்; வானங்கள் உம்முடைய கரத்தின் கிரியையாயிருக்கிறது.

அவைகள் அழிந்துபோம், நீரோ நிலைத்திருப்பீர்; அவைகளெல்லாம் வஸ்திரம்போல் பழமையாய்ப்போம்; அவைகளை ஒரு சால்வையைப்போல் மாற்றுவீர், அப்பொழுது மாறிப்போம்.

நீரோ மாறாதவராயிருக்கிறீர்; உமது ஆண்டுகள் முடிந்துபோவதில்லை.

# 2. மாறாதவர் / *Unchangeable* / *Immutable*

**எண் *23:19***

பொய் சொல்ல தேவன் ஒரு மனிதன் அல்ல; மனம்மாற அவர் ஒரு மனுபுத்திரனும் அல்ல; அவர் சொல்லியும் செய்யாதிருப்பாரா? அவர் வசனித்தும் நிறைவேற்றாதிருப்பாரா?

**யாக் *1:17***

நன்மையான எந்த ஈவும் பூரணமான எந்த வரமும் பரத்திலிருந்துண்டாகி, சோதிகளின் பிதாவினிடத்திலிருந்து இறங்கிவருகிறது; அவரிடத்தில் யாதொரு மாறுதலும் யாதொரு வேற்றுமையின் நிழலுமில்லை.

# 2. மாறாதவர் / *Unchangeable* / *Immutable*

**சங் *33:11*; ஏசா *46:10***

கர்த்தருடைய ஆலோசனை நித்தியகாலமாகவும், அவருடைய இருதயத்தின் நினைவுகள் தலைமுறை தலைமுறையாகவும் நிற்கும்.

***1* சாமு *15:29***

இஸ்ரவேலின் ஜெயபலமானவர் பொய்சொல்லுகிறதும் இல்லை; தாம் சொன்னதைப்பற்றி மனஸ்தாபப்படுகிறதும் இல்லை; மனம்மாற அவர் மனுஷன் அல்ல என்றான்.

**ஏசா *46:11***

அதைச் சொன்னேன், அதை நிறைவேற்றுவேன்; அதைத் திட்டம்பண்ணினேன், அதைச் செய்து முடிப்பேன்.

# 3. நித்தியமானவர் / Eternal / *unlimited or infinite w.r.t time*

**சங் 90:2,4**

பர்வதங்கள் தோன்றுமுன்னும், நீர் பூமியையும் உலகத்தையும் உருவாக்குமுன்னும், நீரே அநாதியாய் என்றென்றைக்கும் தேவனாயிருக்கிறீர்.

உமது பார்வைக்கு ஆயிரம் வருஷம் நேற்றுக்கழிந்த நாள்போலவும் இராச்சாமம்போலவும் இருக்கிறது.

**யோபு 36:26**

இதோ, தேவன் மகத்துவமுள்ளவர்; நாம் அவரை அறிய முடியாது; அவருடைய வருஷங்களின் இலக்கம் ஆராய்ந்து முடியாதது.

**வெளி 1:8**

இருக்கிறவரும் இருந்தவரும் வருகிறவருமாகிய சர்வவல்லமையுள்ள கர்த்தர்: நான் அல்பாவும், ஓமெகாவும், ஆதியும் அந்தமுமாயிருக்கிறேன் என்று திருவுளம்பற்றுகிறார்.

# 3. நித்தியமானவர் / Eternal / *unlimited or infinite w.r.t time*

## *1 தீமோ 1:17*

நித்தியமும் அழிவில்லாமையும் அதரிசனமுமுள்ள ராஜனுமாய், தாம் ஒருவரே ஞானமுள்ள தேவனுமாயிருக்கிறவருக்கு, கனமும் மகிமையும் சதாகாலங்களிலும் உண்டாயிருப்பதாக. ஆமென்.

## சங் *102:12*

கர்த்தராகிய நீரோ என்றென்றைக்கும் இருக்கிறீர்;

## உபா *33:27*

அநாதி தேவனே உனக்கு அடைக்கலம்; அவருடைய நித்திய புயங்கள் உனக்கு ஆதாரம்;

# 4. சர்வவியாபி / *Omnipresent* / *Unlimited or infinite w.r.t space*

**எரே 23:23,24**

யாவனாகிலும் தன்னை நான் காணாதபடிக்கு மறைவிடங்களில் ஒளித்துக்கொள்ளக்கூடுமோ..; நான் வானத்தையும் பூமியையும் நிரப்புகிறவர் அல்லவோ...

**ஏசா 66:1**

வானம் எனக்குச் சிங்காசனம், பூமி எனக்குப் பாதபடி;

**சங் 139:7-9**

உம்முடைய ஆவிக்கு மறைவாக எங்கே போவேன்? உம்முடைய சமுகத்தைவிட்டு எங்கே ஓடுவேன்? நான் வானத்திற்கு ஏறினாலும், நீர் அங்கே இருக்கிறீர்; நான் பாதாளத்தில் படுக்கை போட்டாலும், நீர் அங்கேயும் இருக்கிறீர். .. சமுத்திரத்தின் கடையாந்தரங்களிலே போய்த் தங்கினாலும், அங்கேயும் உமது கை என்னை நடத்தும், உமது வலதுகரம் என்னைப் பிடிக்கும்.

# 5. சர்வஞானி / Omniscient / All knowing

தேவன் **எல்லோரையும்** பார்க்கிறார் - நீதி *15:3*

தேவன் **எல்லாவற்றையும்** அறிந்திருக்கிறார் - சங் *147:4;*மத்*10:29,30(*தலை முடி*)*

தேவன் **தம்முடையவர்களை** அறிந்திருக்கிறார் - யோவா *10:14; 2* தீமோ *2:19*

தேவன் **கடந்த காலம், நிகழ்காலம், எதிர்காலங்களை** அறிந்திருக்கிறார் - அப் *15:18;* மத் *11:23*

# 5. சர்வஞானி / Omniscient / All knowing

தேவன் மனிதனை நன்கு அறிந்திருக்கிறார்

- நம்முடைய **இருதயத்தின் நினைவுகளை** - சங் *139:26; 44:21*
- நம்முடைய **வார்த்தைகளை** - சங் *139:4* (நாவில் சொல் பிறவாததற்குமுன்னே)
- நம்முடைய **செயல்களை** - சங் *139:2,3;* வெளி *2:2,9,13,19; 3:1,8,15*
- நம்முடைய **வேதனைகளை** - யாத் *3:7*
- நம்முடைய **தேவைகளை** - மத் *6:32*
- நமக்கும் தேவனுக்கும் உள்ள **உறவை** - ஆதி *18:17-19; 22:11,12; 2* நாளா *16:9*
- நம்முடைய **பெலவீனங்களை** - சங் *103:14*
- நம்முடைய **முட்டாள்தனத்தை** - சங் *69:5*
- நம்முடைய **குற்றங்களை** - சங் *69:5*

# 6. சர்வவல்லவர் / Omnipotent / All powerful

- தேவன் அனைத்தின் மீதும் அதிகாரமும் வல்லமையும் உடையவர்
- தேவனால் கூடாதது என்று ஒன்றும் இல்லை - மத் *19:26;* மாற் *10:27*
- இயற்கையின் மீது அதிகாரமும் வல்லமையும் உடையவர்
  - ஆதி *1:4* - **வெளிச்சத்தின்** மீதும், **இருளின்** மீதும்
  - ஆதி *1:7* - **தண்ணீரின்** மீதும், **வானம்/ஆகாயத்தின்** மீதும்
  - ஆதி *1:10* - **சமுத்திரத்தின்** மீதும், **நிலத்தின்** மீதும்
  - ஏசா *40:12* - தண்ணீரை கைப்பிடியாய் **அளந்து வைத்திருக்கிறார்**
  - ஏசா *40:12* - மலைகளை, பர்வதங்களை **அளந்து வைத்திருக்கிறார்**
  - ஏசா *40:15* - இராஜ்யங்கள் **தூசி** போலவும், ஒரு **துளியை** போலவும் இருக்கின்றன
  - ஏசா *40:15* - தீவுகளை **அணுவை** போல எண்ணுகிறார்
  - சங் *147:4* - நட்சத்திரங்களை **பேரிட்டு** அழைக்கிறார்

# 6. சர்வவல்லவர் / Omnipotent / All powerful

- **மனிதர்கள்** மீது - தானி *4:30-32;* அப் *12:20-23*
- **தூதர்களின்** மீது - சங் *103:20*
- **சாத்தானின்** மீது - யோபு *1:12; 2:6*
- **மரணத்தின்** மீது - எபி *2:14,15*
- **வானம், பூமியின்** மீது - ஆதி *1:1*
- **பிறப்பிலே**
  - ஆதாமின் பிறப்பு - ஆதி *2:7*
  - ஏவாளின் பிறப்பு - ஆதி *2:22*
  - மற்ற மனிதர்களின் பிறப்பு - ஆதி *1:28; 2:24*
  - இயேசுவின் பிறப்பு - மத் *1:23*
  - கல்லுகளினாலே பிள்ளைகளை உண்டாக்க வல்லவர் - மத் *4:3*

# 7. அதரிசனமானவர் / *Invisible*

- யோவா *1:18* - தேவனை ஒருவனும் **ஒருக்காலுங் கண்டதில்லை**, பிதாவின் மடியிலிருக்கிற ஒரேபேறான குமாரனே அவரை வெளிப்படுத்தினார்
- *1* தீமோ *1:17* - நித்தியமும் அழிவில்லாமையும் **அதரிசனமுமுள்ள** ராஜனுமாய், தாம் ஒருவரே ஞானமுள்ள தேவனுமாயிருக்கிறவருக்கு...
- *1* தீமோ *6:16* - சேரக்கூடாத ஒளியில் வாசம்பண்ணுகிறவரும், மனுஷரில் **ஒருவரும் கண்டிராதவரும்**, **காணக்கூடாதவருமாயிருக்கிறவர்**...
- *1* யோவா *4:12* தேவனை ஒருவரும் **ஒருபோதும்** கண்டதில்லை; நாம் ஒருவரிடத்தில் ஒருவர் அன்புகூர்ந்தால் தேவன் நமக்குள் நிலைத்திருக்கிறார்...
- யாத் *33:11* - ஒருவன் தன் சிநேகிதனோடே பேசுவதுபோல, கர்த்தர் மோசேயோடே முகமுகமாய்ப் பேசினார்;
- யாத் *33:20* - நீ என் முகத்தைக் காணமாட்டாய், ஒரு மனுஷனும் என்னைக் கண்டு உயிரோடிருக்கக்கூடாது

# 7. அதரிசனமானவர் / *Invisible*

- யோவா *4:24* - தேவன் **ஆவியாயிருக்கிறார்**, அவரைத் தொழுதுகொள்ளுகிறவர்கள் ஆவியோடும் உண்மையோடும் அவரைத் தொழுதுகொள்ளவேண்டும்..
- யாத் *20:4* மேலே வானத்திலும், கீழே பூமியிலும், பூமியின்கீழ்த் தண்ணீரிலும் உண்டாயிருக்கிறவைகளுக்கு ஒப்பான ஒரு **சொரூபத்தையாகிலும்** யாதொரு **விக்கிரகத்தையாகிலும்** நீ உனக்கு **உண்டாக்கவேண்டாம்**;
- யாத் *20:5* நீ அவைகளை **நமஸ்கரிக்கவும் சேவிக்கவும் வேண்டாம்**; .. என்னைப் பகைக்கிறவர்களைக் குறித்து.. மூன்றாம் நான்காம் தலைமுறைமட்டும் விசாரிக்கிறவராயிருக்கிறேன்.
- யாத் *20:6* என்னிடத்தில் **அன்புகூர்ந்து**, என் **கற்பனைகளைக் கைக்கொள்ளுகிறவர்களுக்கோ** ஆயிரம் தலைமுறைமட்டும் இரக்கஞ்செய்கிறவராயிருக்கிறேன்.

# முடிவுரை

- தேவனுடைய பண்புகளை அறிந்துக்கொள்வதினால் தேவன் எப்படிப்பட்டவர் என்பதை அறிந்துக்கொள்ளலாம்
- அவர் நம்மிடம் எதிர்ப்பார்ப்பதை புரிந்துக்கொள்ளலாம்
- போலியான தெய்வங்களை அடையாளம் கண்டுக்கொள்ளலாம்
- நம்முடைய தேவைகளை சந்திக்க நமக்கு துணையாக நிற்பவர் யார் என்றும், நமக்குள் இருந்து நம்மை பாதுகாக்கும் தேவன் எவ்வளவு பெரியவர் என்றும் விளங்கும்
- இதனால் நம்முடைய விசுவாசம்(உறுதியான நம்பிக்கை) பெருகும்
- எந்த சூழ்நிலைகளையும் எளிதாய் மேற்க்கொள்ளலாம்

# முடிவுரை

- இந்த வீடியோ மூலமா கேட்டவைகள் உங்களுக்கு புரிந்திருக்கும் என்று நெனைக்கிறேன்.
- தேவனைக் குறித்து மேலும் அறிந்துக்கொள்ள எங்களுடைய மற்ற வீடியோக்களையும் பாருங்கள்.
- ஏதாவது கேள்விகள் இருந்தால் *WhatsApp* அல்லது *Email* மூலமாக தொடர்புக்கொள்ளுங்கள்.
- தேவன் தம்மைகுறித்து இன்னும் அதிகமாய் அறிந்துக்கொள்ள உதவி செய்வாராக

